# MIRACLE MINISTRY

## அற்புத ஊழியம்

**Editor: Sis. SHANTHI SOLOMON**

**March - 2021**

## அற்புத ஊழியம்
## தொலைக்காட்சி நிகழ்ச்சிகள்






ஒவ்வொரு சனிக்கிழமையும்
காலை 8-00 மணி முதல்
8-30 மணி வரை

## ஏஞ்சல் TV-யில்

## Sis. சாந்தி சாலமோன்

செய்தியளிப்பார்

ஒவ்வொரு மாதமும்
முதல் மற்றும் மூன்றாம்
புதன் கிழமைகளில்
பிற்பகல் 12-00 முதல் 12-30 வரை




## நம்பிக்கை TV-யில்

## Sis. சாந்தி சாலமோன்

செய்தியளிப்பார்

# மார்ச் 2021 - வாக்குத்தத்தம்

**"என் ஆத்துமாவே, நீ ஏன் கலங்குகிறாய்?"** (சங்கீதம் 43:5).

சங்கீதக்காரன் சொல்வதுப் போல், நீ ஏன் கலங்குகிறாய்? உன்னுடைய கலக்கம் எதுவாய் இருந்தாலும், அதை நான் காண்கிற தெய்வமாய் இருக்கிறேன். எனவே, இம்மாதம் நீங்கள் கலங்கும் ஒவ்வொரு கலக்கத்திற்கும் என் தேவன் நிச்சயம் பதில் கொடுப்பார்! நீங்கள் விசுவாசியுங்கள். எப்பொழுதும் நம் கலக்கத்தைப் போக்கக் கூடிய வல்லமை நமதாண்டவரிடம் மட்டுமே உள்ளது. உலகில் பிறந்த எந்த மனிதனாலும் நம் கலக்கத்தை மாற்ற முடியாது. இப்பத்திரிகையைத் திறந்து விசுவாசத்துடனும், ஜெபத்துடனும் வாசிக்கும் உங்களைப் பார்த்துக் **"கலங்காதே"** என்று கர்த்தர் சொல்கிறார்!

அதே சங்கீதம் 43:5-ல் பார்க்கிறோம், தேவனை நோக்கிக் காத்திரு. இதற்காக நம்மால் ஒன்றும் செய்ய முடியாது. ஆனால், ஒன்றே ஒன்றை செய்யும்போது, நிச்சயம் கலங்கிப்போன நம்மை நாமே திடப்படுத்திக் கொள்ள முடியும், அதுதான் தேவனை நோக்கிக் காத்திருப்பது.

கிடைக்கிறதோ, இல்லையோ? தேவனைத் துதி. உங்கள் துதியினால் தேவனை மகிமைப்படுத்தும் போதுதான் நமக்கு அற்புதம் நடக்கும்! நம்மால் சாதிக்க முடியாதது என்று ஒன்றுமே இல்லை. மிகவும் வல்லமைப் படைத்த, மாபெரும் அற்புதங்களைச் செய்யும் நம் கர்த்தர் நேற்றும், இன்றும், என்றும் மாறாத தேவனாக உங்களோடும், என்னோடும் இருக்கும்போது நமக்குக் கலக்கம் ஏன்? நிச்சயம் சமாதானம் வரும்! ஆமென்!!

கிறிஸ்துவின் அற்புதப் பணியில் உங்கள் அன்பு சகோதரி,

சாந்தி சாலமோன்

**வங்கிக் கணக்கின் பெயர்:**

| | | |
|---|---|---|
| Miracle Ministry | : | A/c. No.0974101019647 |
| Shanthi Solomon | : | A/c. No. 0974101034594 |
| வங்கியின் பெயர் | : | Canara Bank, |
| கிளை | : | Anna Nagar East |
| IFSC CODE | : | CNRB0000974 |
| MICR CODE | : | 600015005 |

**அற்புத ஊழியம்**
2/4, கணபதி நகர்,விவேகானந்தா மெயின் ரோடு,
கொளத்தூர், சென்னை 60009, Phone: 044 4867 8077

# நான் கடந்து வந்தப் பாதைகள்
## (சகோதரி சாந்தி சாலமோன்)

என் அன்பிற்குரிய வாசகர்களே, இக்கட்டுரையை வாசிக்கும் பொழுதே, நீங்கள் கடந்து வந்தப் பாதைகளை எண்ணிக் கர்த்தரை ஸ்தோத்தரியுங்கள். அதே சமயம், உங்கள் பாதைகளைக் குறித்தும் எழுதி வையுங்கள். உலகில் பிறந்த ஒவ்வொரு மனிதனுக்கும், மனுஷிக்கும் இப்படிப்பட்ட சூழ்நிலைகள் அநேகம் உண்டு. எனக்குத்தான் பிரச்சனை, என் வாழ்க்கைத்தான் சூன்யமாகி விட்டது, நான் மட்டும்தான் கஷ்டப்படுகிறேன் என்று எண்ணாமல், உலகில் உள்ள அநேக மக்கள் இப்படிப்பட்ட வேதனைக்குரிய வாழ்க்கையைத்தான் வாழ்கிறார்கள் என்ற மன நிம்மதி, வேதனையை அனுபவிக்கும் மக்களுக்குக் கிடைக்கும். நிறையப்பேர் இதை அதிகமாக வரவேற்கிறார்கள். இன்னும் சொல்லப் போனால், பிரசங்கத்தைப் படிப்பதைக் காட்டிலும், இது சுவாரசியமாக இருப்பதால், அடுத்தது என்ன? என்ற ஓர் ஆர்வம் வருகிறது என்று எனக்குக் கடிதம் எழுதுகிறார்கள், தொலைப்பேசியிலும் சொல்கிறார்கள். உண்மையான வாழக்கையின் அனுபவம், நிச்சயம் மற்றவர்களுக்கு பிரயோஜன மளிக்கும் என்ற நல்லெண்ணத்துடன் என் பயணத்தைத் தொடர்கிறேன்.

திருமணம் முடிந்து என் கணவர் வீட்டிற்குப் போன நான், இரண்டு நாட்களுக்குப் பின் என் வீட்டிற்கு நாங்கள் இருவரும் வந்து விட்டோம். என் கணவருக்கு அவர்கள் வீட்டைக் காட்டிலும், எங்கள் வீடு மிகவும் பிடிக்கும். காரணம், எனக்குப் பின் என் மூன்று சகோதரிகள் ராணி, பிரேமி, சில்வியா என்றிருந்தார்கள். என்றைக்கு என்னைத் திருமணம் செய்தாரோ, அன்றையிலிருந்து என் தங்கைகளிடம் அவர் சொல்லும் ஒரு வார்த்தை, இனி நான்தான் உங்கள் அப்பா. அது மட்டுமல்ல, என் அம்மாவிடம், Aunty இனி இவங்க என்ன தவறு செய்தாலும் என்னிடம் சொல்லுங்கள். எனக்கு இனி உங்கள் மகள்களை அடிக்கக் கூட உரிமை உண்டு என்பார்கள். என் அம்மா உடனே, ஆமாம்பா உனக்கு எல்லா உரிமையும் உண்டு, நீ தான் என் வீட்டு மூத்த மருமகன் என்று சொன்னார்கள். காரணம், என் தாய்க்கும் என் கணவர் Dr. ஜான் சாலமோனை அதிகம் பிடிக்கும்.

என் கணவருக்கு மூத்த அண்ணன் மரித்து விட்டார். 2-வது அண்ணன் Rev. வில்லியம் தேவதாஸ். ஊரப்பாக்கத்தில் அவரும், அவர் மனைவி அன்பு அக்கா மேரிக்கண்ணும் வல்லமையாய் சபை நடத்தி வந்தார்கள். அவர்களிடம் என் கணவர் அண்ணா, உங்களுக்கு ஒரு மைத்துனிக்கூடக் கிடையாது. எனக்கு 3 மைத்துனிகள் இருக்கிறார்கள் என்பார். அவர் உடனே, நீ கொடுத்து வைத்தவன் என்று சொல்வார். என் சகோதரிகள் எப்போதும் வந்து அவரிடம் எது வேண்டுமானாலும் கேட்பார்கள். சில வேளைகளில், எனக்குத் தெரியாமல் கூட அவர்களை

கவனிப்பார். என்மீது உள்ள அன்பைக் காட்டிலும், என் தாய் Mrs. Mary Jeyaseeli Barnabas மீது அதிக பாசம் வைத்திருந்தார். 3 நாட்கள் என் தாயின் வீட்டில் இருந்து விட்டு, திரும்ப என் கணவர் வீட்டிற்கு வந்தேன். என் அம்மா தன்னால் இயன்ற சீர்வரிசைகளைத் திறம்படச் செய்தார்கள்.

அந்நாட்களில் என் கணவர் இயேசு அழைக்கிறார் அலுவலகத்தில் Uncle D.G.S. தினகரன் அவர்களுக்கு P.A. வாகப் பணி யாற்றிக் கொண்டிருந்தார். அவர் திருமணததிற்கு முன்பதாகவே ஒரு தீர்மானம் செய்திருந்தார். அதை என்னிடமோ, என் குடும்பத்தினரிடமோ சொல்லவே இல்லை. அவர் தனியாய் ஜெபித்துக் கொண்டிருந்தார். என்றைக்கு கோயம்புத்தூரில் நடந்த 100 சாட்சி கூட்டத்தில் தன்னை ஒப்புக்கொடுத்து, நான் இங்குப் பிரங்கித்த ஊழியரைப்போல் ஒரு பெரிய ஊழியனாக வேண்டும், அதே நேரம் அவர் பக்கத்தில் பாடும் பெண்ணைப் போன்று நன்றாகப் பாடக் கூடிய மனைவி வேண்டும் என்றும் கேட்ட ஜெபம் நிறைவேறி விட்டது இப்போது. எனவே, இனி நானும், என் மனைவியும் இணைந்து கர்த்தருடைய முழுநேர ஊழியத்தைச் செய்ய வேண்டும் என்று, அவரது தீர்மானம் நிறைவேற 10 நாட்கள் உபவாசித்து, தேவசித்தம் அறிந்து, ஜெபிப்பதற்கு முன்பதாக என்னிடம் ஒரு கேள்விக் கேட்டார். சாந்தி எனக்கு யாருடைய விருப்பமும் தேவையில்லை. உன்னுடைய விருப்பம் மிக, மிக முக்கியமானது. உன் குடும்பத்திலுள்ள அத்தனைப் பேரும் திருமணம் பேசும்போது, நான் ஊழியத்தில் இருப்பதைக் கொஞ்சம் யோசித்தார்கள். ஆனால், இனி முழு நேர ஊழியம் செய்ய வேண்டிய வேளை வந்து விட்டது. நீ என்ன சொல்கிறாய் என்று என்னைப் பார்த்துக் கேட்டார். அவர் இப்படிக் கேட்டதும், திருமணம் முடிந்து சில நாட்களில் நான் சற்றும் தாமதிக்காமல் தாராளமாய் ஊழியம் செய்யலாம், அதற்கு நான் எந்த விதத்திலும் தடையாக இருக்க மாட்டேன், காத்தருடைய சித்தம் நம் வாழ்வில் நிறைவேறட்டும் என்று சொன்னேன்.

அவர் உபவாசம் எடுத்த அந்நாட்களில், காலஞ் சென்ற போதகர் செல்வராஜ் (பட்டாபிராம்) அவர்கள் தீடீரென்று எங்கள் வீட்டிற்கு வந்தார். அவர் ஒரு நல்ல தீர்க்கதரிசி. அவர் என் கணவருக்கு ஜெபித்து, சாலமோன் நீங்கள் தனித்து, முழுநேர ஊழியம் செய்வதைக் கர்த்தர் விரும்புகிறார். அதற்கேற்ற வேளையும் வந்து விட்டது என்று சொன்னார். இதேப் போன்று பல தீர்க்கதரிசிகள் கர்த்தர் சொன்னதைச் சொன்னார்கள். பத்து நாட்களுக்குப் பின், தெளிந்த முடிவுடன் என் கணவர் Dr. John Solomon இயேசு அழைக்கிறார் ஊழியத்தை விட்டு, முழு நேர ஊழியத்தைச் செய்ய ஆரம்பித்தார். ஆனால், நிறைய பேர் என் கணவர் இப்படிச் செய்ததற்குக் காரணம் நான்தான் என்று சொன்னார்கள். திருமணத்திற்கு பிறகு சாந்திதான் இப்படி செய்து விட்டாள் என்று நினைத்தார்கள். நிச்சயமாக நான் இல்லை. பூரணமாய் தேவ சித்தம் மட்டுமே நிறைவேறிற்று! முழு நேர ஊழியத்தைச் செய்யும்படி நானும், என் கணவரும் முற்பட்டோம். இத்துடன் முடிக்கிறேன். அடுத்த இதழில் நாம் சந்திப்போம்.

# கர்த்தருக்குக் காத்திரு!

ஆதியாகமம் 15:1-6 அதிகாரத்தில் "கர்த்தருடைய வார்த்தை ஆபிராமுக்குத் தரிசனத்திலே உண்டாகி, அவர் ஆபிராமே, நீ பயப்படாதே; நான் உனக்குக் கேடகமும், உனக்கு மகா பெரிய பலனுமாயிருக்கிறேன் என்றார். அதற்கு ஆபிராம் காத்தராகிய ஆண்டவரே, அடியேனுக்கு என்ன தருவீர்? நான் பிள்ளையில்லாமல் இருக்கிறேனே. தமஸ்கு ஊரானாகிய இந்த எலியேசர் என் வீட்டு விசாரணைக்கர்த்தனாய் இருக்கிறானே என்றான். பின்னும் ஆபிராம் தேவரீர் எனக்குப் புத்திர சந்தானம் அருளவில்லை. இதோ என் வீட்டிலே பிறந்த பிள்ளை எனக்குச் சுதந்தரவாளியாய் இருக்கிறான் என்றான். அப்பொழுது கர்த்தருடைய வார்த்தை அவனுக்கு உண்டாகி இவன் உனக்குச் சுதந்தரவாளியல்ல, உன் கர்ப்பப்பிறப்பாயிருப்பவனே உனக்குச் சுதந்தரவாளியாவான் என்று சொல்லி, அவர் அவனை வெளியே அழைத்து நீ வானத்தை அண்ணார்ந்து பார், நட்சத்திரங்களை எண்ண உன்னாலே கூடுமானால், அவைகளை எண்ணு என்று சொல்லி, பின்பு அவனை நோக்கி உன் சந்ததி இவ்வண்ணமாய் இருக்கும் என்றார். அவன் கர்த்தரை விசுவாசித்தான், அதை அவர் அவனுக்கு நீதியாக எண்ணினார்".

கர்த்தர் ஆபிராமிடம் தெளிவாய் பேசினப் பிறகு நடந்த சம்பவம் தான் ஆதியாகமம் 16-ஆம் அதிகாரத்தில் உள்ளது. அவனுடைய மனைவி சாராய்க்கு பிள்ளையில்லாதிருந்ததால், அடிமைப் பெண்ணாகிய ஆகாரை ஆபிரகாமுக்குக் கொடுத்து, ஒருவேளை அவளால் என் வீடு கட்டப்படும் என்றாள். ஆபிராம், சாராயின் வார்த்தைக்குச் செவிக் கொடுத்தார். தனக்கு தரிசனமாகிச் சொன்ன தேவனின் வார்த்தையைக் காட்டிலும், தன் மனைவியின் சொல் அவனுக்கு அந்நேரத்தில் சரியாய் தோன்றிற்று. காரணம், அவனும் மனிதன்தான். ஆனால், விசுவாசிகளின் தந்தை இச்சந்தர்ப்பத்தில் கர்த்தருக்குக் காத்திருக்கவில்லை. அவசரமாய் எடுத்தத் தவறான முடிவுதான் பல தவறான காரியங்கள் ஆபிராம் வாழ்கையில் நடந்து இரு சந்ததியாய் பிரிக்கப்பட்டது.

தேவனின் வார்த்தையைக் காட்டிலும் அவனுக்கு அந்நேரத்தில் சாராயின் வார்த்தைச் சரியாய் தோன்றிற்று. ஆகாரின் மூலமாய் தன் சந்ததி பெருகும் என்று ஆபிராமும், சாராயும் நினைத்தார்கள். ஆகாரின் வழியாக இஸ்மவேலும், அவன் சந்ததியினரும் தோன்றினர். சாராளின் வழியாக ஈசாக்கும், இஸ்ரவேல் சந்ததியினரும் தோன்றினர். இஸ்ரவேலருக்கும், அரபியருக்கும் அன்று எழும்பின பகை இன்றும் தீரவில்லை. அநேக வேளைகளில் கர்த்தர் நமக்கு சொன்ன வார்த்தைக்கு நாம் செவிச் சாய்க்காமல், அவருக்குக் காத்திருக்காமல்,

நம் வாழ்க்கையிலும் அநேக அசம்பாவிதங்களையும், விபரீதங்களையும் சந்திக்கிறோம். இப்படிப் பட்ட வேதனைகள் நடந்த வாழ்க்கையை நாம் தியானிக்கும் போது, எந்த காரியத்திலும் நாம் கர்த்தருக்கு மட்டுமே காத்திருக்க முற்படுவோம்.

"கர்த்தருக்குக் காத்திருப்போர் ஒருபோதும் வெட்கப்பட்டு போவதில்லை" யாத்திராகமம் 24-ஆம் அதிகாரத்தில் 3-ஆம் வசனத்தில் மோசே வந்து, கர்த்தருடைய வார்த்தைகள் யாவும், நியாயங்கள் என்று ஜனங்களுக்கு அறிவித்தான். அப்பொழுது ஜனங்கள் எல்லோரும் ஏகசத்தமாய் காத்தர் அருளின எல்லா வார்த்தைகளின்படியும் செய்வோம் என்று பிரதியுத்தரம் சொன்னார்கள்.

மோசே கர்த்தருடைய வார்த்தைகளையெல்லாம் எழுதி வைத்து, **"உடன்படிக்கையின் புஸ்தகத்தை எடுத்து, ஜனங்களின் காது கேட்க வாசித்தான். அவர்கள் கர்த்தர் சொன்னபடியெல்லாம் செய்து, கீழ்ப்படிந்து நடப்போம் என்றார்கள்"** (யாத்திராகமம் 24:7). மோசே சீனாய் மலையில் ஏறி இரவும், பகலும் 40 நாள் மலையில் இருந்தான். வாக்குக் கொடுத்த ஜனங்கள் அப்படி நடக்காமல் **"மோசே மலையிலிருந்து இறங்கி வரத் தாமதிக்கிறதை ஜனங்கள் கண்டபோது, அவர்கள் ஆரோனிடத்தில் கூட்டங்கூடி, அவனை நோக்கி எகிப்து தேசத்திலிருந்து எங்களை அழைத்துக் கொண்டு வந்த அந்த மோசேக்கு என்ன சம்பவித்ததோ அறியோம்"** என்றார்கள் (யாத்திராகமம் 32). தங்களிடத்தில் இருந்த பொன்னணிகளைக் கழற்றி ஆரோனிடம் கொண்டு வந்து ஒரு கன்றுக் குட்டியை வார்ப்பித்து அதை தெய்வமாக்கினர். சொன்ன மனிதர்கள், சொன்னச் சொல்லில் உண்மையாய் இல்லை. கர்த்தருக்கு இடம் கொடாமல், கர்த்தருடைய கோபாக்கினைக்கு ஆளானார்கள் வணங்காக் கழுத்துள்ள ஜனங்கள் என்று கர்த்தர் சொன்னார். மோசே கர்த்தருடைய கோபம் போகத் தன்னைத் தாழ்த்தி ஜெபித்தான். இதை வாசிக்கும் நாமும் கூட எந்த ஒரு பாகத்திலும் கர்த்தருடைய கோபத்திற்கு ஆளாகாதபடி, கர்த்தருக்குக் காத்திருப்போம். எவரெல்லாம் காத்தருக்குக் காத்திருக் கிறார்களோ, அவர்களை நம் தேவன் நிச்சயம் உயர்த்துவார்!

கீஸ்ஸின் மகனான சவுல், காணாமல் போன தன் தகப்பனின் கழுதையைத் தேடிப் போக, அவனுடன் ஒரு வேலைக்காரனை அவன் தகபபன் அனுப்பினார். கழுதையைத் தேடப் போனவனை, வேலைக்காரன் சாமுவேல் தீர்க்கதிரிசியிடம் அழைத்துச் சென்றான். காரணம், அவர் சொல்வதெல்லாம் நடக்கும், நாம் போக வேண்டிய வழியை அவர் அறிவிப்பார் என்றான். 1 சாமுவேல் 9-ஆம் அதிகாரத்தில் இதை நாம் முழுமையாய் காணலாம். சவுல் ஞானதிருஷ்டிக்காரனாகிய சாமுவேலை சந்திப்பதற்கு முன்பாகவே, ஒரு நாள் கர்த்தர் சவுலைக்

குறித்து சாமுவேலுக்கு வெளிப்பாடுக் கொடுத்தார். இஸ்ரவேல் ஜனங்களுக்கு ராஜாவாய் ஏற்படுத்த உனக்கு நான் சொல்லியிருந்த மனுஷன் இவன்தான். என் ஜனத்தை ஆளுவான். இவனை அபிஷேகம் பண்ணு என்றார். சாமுவேல் தைலக்குப்பியை எடுத்து சவுலின் தலைமேல் வார்த்து அபிஷேகம் பண்ணினார்.

**“நீ இன்றைக்கு என்னை விட்டுப் போகிறபோது, பென்யமீன் எல்லையாகிய செல்சாகில் ராகேலின் கல்லறையண்டையில் இரண்டு மனுஷரைக் காண்பாய். அவர்கள் உன்னைப் பார்த்து நீ தேடப்போன கழுதைகள் அகப்பட்டது”** (1 சாமுவேல் 10:2) என்று சொல்லுவார்கள்.

**“பெலிஸ்தரின் தாணையம் இருக்கிற தேவனுடைய மலைக்குப் போவாய். அங்கே நீ பட்டணத்திற்குள் பிரவேசிக்கையில், மேடையிலிருந்து இறங்கிவருகிற தீர்க்கதரிசிகளின் கூட்டத்திற்கு எதிர்படுவாய். அவர்களுக்கு முன்பாகத் தம்புரும் மேளமும் நாதசுரமும் சுரமண்டலமும் போகும். அவர்கள் தீர்க்கதரிசனம் சொல்லுவார்கள். அப்பொழுது கர்த்தருடைய ஆவி உன்மேல் இறங்குவார். நீ அவர்களோடே கூடத் தீர்க்கதரிசனம் சொல்லி, வேறு மனுஷனாவாய் ... தேவன் உன்னுடனே இருக்கிறார் என்றார்”** (1 சாமுவேல் 10:5-7).

நீ எனக்கு முன்னே கில்காலுக்கு இறங்கிப்போ. சர்வாங்க தகனபலிகளையும், சமாதானபலிகளையும் செலுத்தும்படிக்கு, நான் உன்னிடத்தில் வருவேன். நான் உன்னிடத்தில் வந்து, நீ செய்ய வேண்டியதை உனக்கு அறிவிக்குமட்டும் **“ஏழுநாள் காத்திரு என்றான்”**. சவுல், சாமுவேல் குறித்த காலத்தின்படி 7 நாள் காத்திருந்தான். சாமுவேல் வர கொஞ்சம் தாமதமான போது ஜனங்கள் சிதறிப் போவதைக் கண்டு சாமுவேல் சொன்ன வார்த்தையை மீறி சர்வாங்க தகனபலியையும், சமாதான பலிகளையும் சவுலே செய்து விட்டான். இவன் கர்த்தருக்குக் காத்திருக்கவில்லை. தேவ மனுஷன் சொன்னதையும் மீறி நடந்தபடியால், சாமுவேல், நீ புத்தியீனமாய் செய்தீர். உம்முடைய தேவனாகிய கர்த்தர் இஸ்ரவேலின்மேல் உம் ராஜ்யபாரத்தை ஸ்திரப்படுத்தியிருப்பார் (1 சாமுவேல் 13:13). இப்போது உம் ராஜ்யபாரம் நிலைநிற்காது என்று சொன்னார்.

இப்படித்தான் சவுலைப் போல நாமும் எல்லாவற்றிலும் சரியாய் போய்க் கொண்டே இருப்போம். ஆனால், கர்த்தர் நமக்கு உணர்த்தும் சில காரியங்களில் தவறி நடக்கும் போதும், கர்த்தருக்காக விட்டுக் கொடுத்து, காத்திராமல் நம் சுய பெலனால் சாதிக்கும் பொழுதும், கர்த்தருடைய கோபம் நம் மீது அதிகமாகிறது. கழுதையை தேடப் போனவனை அரசனாக்கிய ஒரு மாபெரும் சிலாக்கியத்தைக் கொடுத்த தேவனை நினைத்து கொஞ்சம் தீர்க்கதரிசி சாமுவேலுக்கு பொறுமையாய் காத்திராமல் தவறின சவுலைப் போன்று நாம் இராதபடி,

நிதானமாய் நம் வாழ்கையில் கர்த்தருக்குக் காத்திருந்து, ஆசீர்வாதத்தைப் பெற்றுக் கொள்வோம்! வாழ்க்கையில் பொறுமை மிக, மிக அவசியம். சூழ்நிலை எப்படி மாறினாலும், கர்த்தருக்குள் நிலைத்து நிற்க வேண்டும்.

"கர்த்தருக்குக் காத்திருக்கிறவர்களோ புதுப்பெலன் அடைந்து, கழுகுகளைப்போலச் செட்டைகளை அடித்து எழும்புவார்கள், அவர்கள் ஓடினாலும் இளைப்படையார்கள், நடந்தாலும் சோர்ந்துபோகார்கள்" (ஏசாயா 40:31).

அற்புதப் பணியில்
சகோதரி சாந்தி சாலமோன்

**BOOK POST**




**To**

TB234
Mr.Benjamin Rajapaul
C/o. Mrs. Sugirtham John
42 Vyasa Street
Tambaram East
Madras 600059 Tamil Nadu

If Undelivered Please Return To:
**Miracle Ministry**
2/4, Ganapathy Nagar
Vivekanandha Main Road
Kolathur, Chennai - 600 099